

# குருநாதர் நாமாவளி

இயற்றியவர் :

பாலகவி. M. K. வேங்கடராமன்.

அன்பளிப்பு :-

M. ஸ்ரீராமுலு செட்டியார்,

உரிமையாளர்,

சுதந்திரதேவி பிரஸ்,

திருவூடல் தெரு, — திருவண்ணாமலை.



# குருநாதர் நாமாவளி



குருநாதா ஓம் குருநாதா
குணமலே யெனமிளிர் குருநாதா

அகவொளி நல்கிடு குருநாதா
அச்சம் அகற்றிடு குருநாதா
அடியவர் நடுதிகழ் குருநாதா
அமைதி யளித்தருள் குருநாதா
அருமறைப் பொருளருள் குருநாதா
அருள்நெறி தந்தருள் குருநாதா
அருள்நோக் கொடுதிகழ் குருநாதா
அறவுரு வாயமை குருநாதா
அறிவுக் கறிவாம் குருநாதா
அன்பெழில் கொண்டொளிர் குருநாதா

குருநாதா சத் குருநாதா
குறைகள் தவிர்த்தருள் குருநாதா

ஆகம முடிவருள் குருநாதா
ஆசி புகன்றருள் குருநாதா
ஆசைகள் நீக்கிடு குருநாதா
ஆடல்கள் பலபுரி குருநாதா
ஆணவ இருள்தவிர் குருநாதா
ஆண்டருட் கொடைதரு குருநாதா
ஆதர வெனமிளிர் குருநாதா
ஆரண முடிதிகழ் குருநாதா
ஆலயம் உளமெனும் குருநாதா
ஆறெனும் பகைதவிர் குருநாதா

குருநாதா சித் குருநாதா
குறைவறு நிதிநிகர் குருநாதா

இகபர சுகம் அருள் குருநாதா
இச்சை முடித்தருள் குருநாதா
இணையறு துணையெனும் குருநாதா
இதமொடு செயல்புரி குருநாதா
இதயத் துள்திகழ் குருநாதா
இயலனைத் தும்தெளி குருநாதா

இருவினை வலிதவிர் குருநாதா
இறவா நிலைதரு குருநாதா
இன்ப மெலாம்தரு குருநாதா
இன்னல் தவிர்த்தருள் குருநாதா

குருநாதா தவ குருநாதா
குற்றம் பொறுத்தருள் குருநாதா

ஈகை மிகுந்தொளிர் குருநாதா
ஈடணை தீர்த்தருள் குருநாதா
ஈடிலை எனமிளிர் குருநாதா
ஈடேற் றிடவிழை குருநாதா
ஈட்டருந் திருவெனும் குருநாதா
ஈண்டடி யாரையாள் குருநாதா
ஈதருள் நெறியெனும் குருநாதா
ஈபவர்க் கீந்தருள் குருநாதா
ஈர்த்தெனை யாண்டருள் குருநாதா
ஈறுடன் ஆதியில் குருநாதா

குருநாதா சிவ குருநாதா
கூடரு நிலைதரு குருநாதா

உச்சத்தில் திகழ் குருநாதா
உச்சரிப்பாய் மிளிர் குருநாதா
உணவுடை பொருள்தரு குருநாதா
உண்மை விளக்கிடும் குருநாதா
உத்ஸவம் கொண்டருள் குருநாதா
உயர்வனைத் தும்தரு குருநாதா
உயிருக் குயிராம் குருநாதா
உயும்நெறி எளிதருள் குருநாதா
உழைத்திடத் திறல்தரு குருநாதா
உள்ளத் துழவுசெய் குருநாதா

குருநாதா அருட் குருநாதா
கூறரு புகழுடை குருநாதா

ஊக்கம் மிகப்புரி குருநாதா
ஊட்டி வளர்த்தருள் குருநாதா
ஊதிய மெனத்திகழ் குருநாதா
ஊர்தொறும் சென்றருள் குருநாதா
ஊர்த்துவ நோக்கருள் குருநாதா
ஊழ்வினை மாற்றிடு குருநாதா

ஊறு தவிர்த்தருள் குருநாதா
ஊற்றெனப் பொங்கருட் குருநாதா
ஊனம் அகற்றிடு குருநாதா
ஊனுயிராய் ஒளிர் குருநாதா

குருநாதா ஜெய குருநாதா
கொடிய வினைகள் தவிர் குருநாதா

எங்கும் நிறைந்தொளிர் குருநாதா
எட்டுத் திசையாம் குருநாதா
எண்ண முடித்தருள் குருநாதா
எண்ணெழுத்தாயமை குருநாதா
எப்பக்கமும் சூழ் குருநாதா
எம்மையிலும் தொடர் குருநாதா
எவ்வுயிர்க் குளுமொளிர் குருநாதா
எளிமையில் எமையாள் குருநாதா
என்றும் காத்தருள் குருநாதா
என்னுளத் தும்திகழ் குருநாதா

குருநாதா பர குருநாதா
கொழுநன் எனத்திகழ் குருநாதா

ஏகப் பொருளாம் குருநாதா
ஏக்கம் தவிர்த்தருள் குருநாதா
ஏதம் அகற்றிடு குருநாதா
ஏதும் அளித்தருள் குருநாதா
ஏத்தரு மெய்ப்புகழ் குருநாதா
ஏந்த லெனப்பொலி குருநாதா
ஏமனை வென்றெளிர் குருநாதா
ஏழிசை யாய்விரி குருநாதா
ஏழ்பிறப் பும்தவிர் குருநாதா
ஏற்ற மெலாம்தரு குருநாதா

குருநாதா வர குருநாதா
கோட்டமில் மனம் அருள் குருநாதா

ஐங்கடன் முறைநவில் குருநாதா
ஐங்கணை வலியைவெல் குருநாதா
ஐங்குர வருமாம் குருநாதா
ஐந்தரு நிகரருட் குருநாதா
ஐந்தவத் தையும்தவிர் குருநாதா
ஐந்தறி வும்தரு குருநாதா
ஐந்திணைவளம் அருள் குருநாதா

ஐம்புலன் வெலஅருள் குருநாதா
ஐம்பொனு மாயொளிர் குருநாதா
ஐயம் அகற்றிடு குருநாதா

குருநாதா மெய்க் குருநாதா
கோதில் நலம் தரும் குருநாதா

ஒக்க லெனப்பொலி குருநாதா
ஒடுக்கம் விளக்கிடு குருநாதா
ஒண்கண் எனத்திகழ் குருநாதா
ஒப்புயர் வற்றெளிர் குருநாதா
ஒப்புர வீந்தருள் குருநாதா
ஒருசுட ரெனமிளிர் குருநாதா
ஒருமை யுணர்த்திடு குருநாதா
ஒருமொழி தந்தருள் குருநாதா
ஒளியொளி வகையாம் குருநாதா
ஒல்காப் பெரும்புகழ் குருநாதா

குருநாதா யோக குருநாதா
கோப மயல்தவிர் குருநாதா

ஓகை மிகப்புரி குருநாதா
ஓஷதி நீறெனும் குருநாதா
ஓடமெனப்பொலி குருநாதா
ஓதா மறையாம் குருநாதா
ஓமென ஓங்கருட் குருநாதா
ஓம்பிட வந்தருள் குருநாதா
ஓய்வி லுழைப்புடை குருநாதா
ஓவாத் திருவாம் குருநாதா
ஓவிய மொத்தொளிர் குருநாதா
ஓர்மை மிகுந்தொளிர் குருநாதா

குருநாதா இன்பக் குருநாதா
கோரிய வரம் அருள் குருநாதா

சுதந்திரதேவி அச்சகம், திருவண்ணாமலை.